பாடுபடும்போது, ஆடம்பரங்கள், ஆடம்பரச் செலவுகள் கூடாது என்று சொல்லுவார்களே, எப்போது இந்த மாதிரி மாறியிருக்கிறார்கள் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : காக்கை குருவி எங்கள் ஜாதி என்ற அபிப்பிராயத்தைத்தான் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள் என்று நினைக்கிறேன்.

SRI K. VINAYAKAM : Sir, is it not a fact that by human efforts no bird sanctuary could be built by itself? It is only the natural surroundings that could help for such a sanctuary coming up. If so, is it possible for us to construct a bird sanctuary at a place where we like and to tempt even the communists birds from Russia and China to take shelter in our bird sanctuaries?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The bird sanctuaries can be organized only in places, as pointed out by the hon. Member, with a natural surrounding where a large number of birds congregate. At Vedantangal a large number and a large variety of birds come.

DEPUTY SPEAKER : Questions are over.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II.—ADJOURNMENT MOTION *RE* THE FAILURE OF THE GOVERNMENT TO CHECK THE RISE IN PRICES OF FOOD ARTICLES.

DEPUTY SPEAKER : The hon. Member, Sri N. K. Palanisami has given notice of an adjournment motion to discuss the failure of the Government to check the rise in prices of food articles in hotels.

I am asking whether the Hon. Minister is making any statement.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, அன்று விலைவாசி பற்றி ஒரு அவசரப் பிரேரணை வந்தபோது தாங்கள் ரூலிங் கொடுத்தீர்கள். இப்போது ஹோட்டலைப்பற்றி முக்கியமாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இது அவசரப் பிரேரணைக்கு உரியது அல்ல என்று நான் நினைக்கிறேன். சென்னை நகரத்தைப் பொருத்த மட்டில் சிவில் சப்ளைஸ் கமிஷனரை நகரத்திலுள்ள ஹோட்டல்காரர்களைக் கூப்பிட்டு விசாரணை செய்து எடுத்துக்கொள்ளக்கூடிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளச் சொல்லியிருக்கிறோம். அதே மாதிரி ஜில்லா தலைநகரங்களைப் பொருத்த மட்டில் கலெக்டர்களை விட்டு ஹோட்டல் சொந்தக்காரர்களைக் கூட்டி விசாரித்து வேண்டிய நடவடிக்கைகளை எடுக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி இன்னும் விவரம் வேண்டுமானால் கனம் அங்கத்தினர் ஒரு அவசரக் கேள்வி போட்டால் இன்னும் விவரங்கள் கொடுக்கலாம். இது அவசரப் பிரேரணைக்கு உரியது அல்ல என்று சொல்லிக்கொள்கிறேன்.

27th March 1961]

DEPUTY SPEAKER: I think there is no need for the adjournment motion. 9-30 a.m. The Hon. Minister has explained the position very clearly. The hon. Member can put a short notice question if he likes. Therefore I rule it out of order.

### III. VOTING ON DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1961-62

#### DEMAND VI—GENERAL SALES TAX AND OTHER TAXES

DEPUTY SPEAKER: We shall now take up the next item, viz., Voting on Demands for Grants for the year 1961-62. We may take up Demand VI—General Sales Tax and Other Taxes and Duties Administration. Two hours have been allotted for the discussion on this demand.

SRI V. K. KOTHANDARAMAN: *சார், இந்த மான்யத்தின்மீது விவாதம் ஆரம்பிப்பதற்கு முன்னால் ஒரு விண்ணப்பம். கூட்டுறவுக்கு இரண்டு மணி நேரமும், விற்பனை வரிக்கு ஒரு மணி நேரமும் விவாதமிருந்தால் நல்லது என்பது என்னுடைய அபிப்பிராயம்.*

DEPUTY SPEAKER: As the allotment of time for the discussion of the various demands had already been decided, I am sorry it is not possible to change it at this stage.

* THE HON. SRI R. VENKATARAMAN: Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 62,41,200 under Demand VI—General Sales Tax and Other Taxes and Duties—Administration."

*கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மானிய கோரிக்கையைப்பற்றி நான் சில புள்ளி விவரங்கள் கொடுத்துவிட்டு, அதைக் குறித்து பொதுவான விவரங்கள் எல்லாவற்றையும் பதில் அளிக்கின்ற சமயத்திற்கு ஒதுக்கி வைத்துக்கொள்ளலாம் என்று நினைக்கிறேன். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் நம்முடைய ராஜ்யத்தில் விற்பனை வரி கணிசமாக உயர்ந்திருக்கிறது. அதனால் வருவாய் உயர்ந்திருக்கிறது. இதில் எந்தவிதமான மாறுதலும் செய்யாமல் வரி விதிப்பு அதிகரிக்காமல், அதிகமான வருவாய் வந்திருப்பது நம்முடைய ராஜ்யத்தில் ஏற்பட்டிருக்கிற வர்த்தக-வாணிப முன்னேற்றத்திற்கு ஒரு அறிகுறியாக இருக்கிறது. 1956-57-ம் ஆண்டில் நமக்கு பொது விற்பனைவரி வருமானம் 11 கோடியே 16 லட்சம் ரூபாய். 1960-61-ல் நமக்கு ரிவைஸ்ட் எஸ்டிமேட் பிரகாரம் கிடைக்க இருப்பது 13 கோடியே 67 லட்சம் ரூபாய். அதேபோல மத்திய வருவாயை எடுத்துக் கொண்டால், நமக்கு 1957-58-ல் 57 லட்சத்து 22 ஆயிரம்தான் கிடைத்தது. 1960-61-ல் 215 லட்சம் கிடைக்கும், அதாவது 2 கோடியே 15 லட்சம் ரூபாய் கிடைக்குமென்று எதிர்பார்க்கிறோம். அதில் ஜனவரி மாதம் வரையில் கணக்கெடுத்ததிலே 210 லட்சம் ரூபாய் வந்துவிட்டது. அதனால் ரிவைஸ்ட் எஸ்டிமேட்டைவிட அதிகமாக இருக்குமென்று நாம் எதிர்பார்க்கிறோம். நமக்கு இந்த மத்திய விற்பனைவரி வருவாய் அதிகரித்து வருகிறது என்பது, நம்முடைய ராஜ்யத்தில் இருந்து எந்த அளவுக்குப் பண்டங்கள்*